எழில் ஆர்-அழகுநிறைந்த, கயல்-கயல் மீனை, பொரு-ஒத்து விளங்குகின்ற, விழியார்-கண்களை யுடைய பெண்களின், தந்திரம்-உபாயங்களால், இயலாதன - பொருந்தாதவற்றை, கொடு - கைக்கொண்டு, முயல்வு-முயலுதல், ஆகாது-கூடாது. ஏ-அசை.



78. ஆதிகாளில் பிருதுசக்ரவர்த்தி யென்று ஒரு பெரிய அரசர் இருந்தார். அவர் முதலில் இல்லறத்தில் இருந்துகொண்டு இராஜ்ய பரிபாலனம் பண்ணித் தான தருமங்களையும், பரோபகாரங்களையும, பொது நன்மைக்கு உபயோகமான பல காரியங்களையும் செய்து கீர்த்தியை அடைந்தார். பிற்பாடு, தமது கிழப் பருவத்தில் அரசு முதலிய எல்லாவற்றையும் துறந்து வனத்துக்குச் சென்று தவஞ்செய்து கடவுள் அருளுக்குச் சொந்தமாகிப் பரம பதத்தை அடைந்தார். ஆதலால், ஒருவன் முதலில் இல்லறநெறியில் இருந்து செய்யவேண்டிய கடமைகளை நன்றாகச் செய்து, பிற்பாடு துறவற நெறியால் கடவுள் உலகத்தை அடையவேண்டும். பாகவதம்.

வழியே யேகுக வழியே மீளுக.

வழியே - (ஒருவன் இலலற) வழியிலே, ஏகுக - செல்லக்கடவன்; வழியே-(பின்னர்) அவ்வழியிலிருந்து, மீளுக-(துறவற வழியில்) திரும்பக்கடவன்.



இவைகாண் உலகிற் கியலா மாறே.

இவை - இவைகள் தாம், உலகிற்கு - உலகத்தில் உள்ளவர்களுக்கு, இயல் ஆம்-நடக்கக்கூடிய, ஆறு—நல்லவழிகளாம். காண், ஏ-அசைகள்.

வாழிய நலனே! வாழிய நலனே!

நலன்-எல்லா நன்மைகளும், வாழிய-வாழ்க; நலன்-எல்லா இன்பங்களும், வாழிய-வாழ்க. ஏ-இரண்டும் அசைகள்.

முற்றுப்பெற்றன.



P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS.